அத்வைதம் என்ற அனுபவம் ஸித்திக்கும். இரண்டாவது இல்லாதபோது கார்யமில்லை, பேச்சில்லை, சுற்றுவதில்லை, அலைச்சலே இல்லை. அதாவது உபத்ரவத்தை உண்டாக்கும் எதுவுமில்லை. மனஸில்லாததால் எண்ணமே இல்லாமல் போய் விடுகிறதென்றதற்கப்புறம், மற்றதைப் பற்றிச் சொல்வானேன்? 'மனமாயை' போன அப்புறம் நாலா திசையிலும் போட்டு இழுக்கிற லோகானுபவமே போய்விடும். அதாவது உன்னைப் பொறுத்தமட்டில் லோகமே போய்விடும். ஸம்ஸாரம் என்பதே போய்விடும். நீ தனியாக உட்கார்ந்திருந்தால்கூட உனக்குள்ளே காம, க்ரோதாதி எண்ணம் எதுவும் தோன்றாமல் – இதெல்லாமும் மனஸ் என்கிறதை வைத்து, அதிலிருந்து தோன்றுபவைதானே? மனஸே இல்லாததால் இவையும் தோன்றாமல் – அப்படியே சாந்த நிலையில் சாச்வதமாயிருக்கலாம். நல்லது-கெட்டது என்று பல பேர்களை வைத்துக்கொண்டு உன் சாந்தியைக் குலைக்க வருவதான இரண்டாவது ஸமாசாரம் எதுவுமில்லாமல் நீ பாட்டுக்கு ஸௌக்யமாயிருக்கலாம்.

'ஒண்ணுமே இல்லேன்னா சூன்யமா? கடைசியிலே சூன்யமாவா போறது?' என்று யோசிக்காதே. சூன்யமே இல்லை. அப்போதும் ஆத்மாதான் இருக்கிறதே! நீ நிஜமான நீயாக இருக்கிறாயே, இது எப்படிச் சூன்யமாகும்? மனஸ் போன (அழிந்த) பிறகே அடையக்கூடிய அந்த நிலை எப்படி இருக்குமென்று மனஸுக்குப் புரிய வைக்கவே முடியாது. இருந்தாலும் அத்வைதப் புஸ்தகங்கள் கொஞ்சத்தில் கொஞ்சம் புரிய வைக்கப் பார்க்கின்றன. என்ன சொல்கின்றனவென்றால்: தூக்கத்திலும் மயக்கத்திலுங்கூட நீ ஆத்மாவாக இருந்து கொண்டிருந்தாலும், உனக்கு 'ஸத்' என்ற அந்த இருப்பு நிலை தெரியவில்லை, இல்லையா? ஞான மார்க்கத்தில் ஸாதனை பண்ணி நீ நிஜமான ஆத்மாவாயிருக்கும் ஸமாதியிலோ ஸத்தாக இருப்பதைப் பூர்ணமாகத் தெரிந்துகொண்டு, அனுபவித்துக்கொண்டு அப்படி இருப்பாய். பாக்கியுள்ள ஸகலமும் இருக்கிறதாகத் தெரிந்தாலும் என்றைக்கோ ஒரு நாள் இல்லாமல் போகப் போகிறவைதான். இந்த ஆத்மா மட்டுமே, தற்காலிகமான அந்த எல்லா வ்யவஹார ஸத்யங்களுக்குங்கூட ஆதார

மாக, சாச்வதமாக உள்ள ஒரே ஸத். அப்படிப்பட்ட ஸத்யமே நாமென்ற பூர்ண ப்ரஜ்ஞையோடு இருப்பாய். இப்படிச் சொன்னதாலேயே அப்போது நீ ஞானத்தோடு, அதாவது 'சித்' ப்ரகாசத்தோடு இருக்கிறாயென்று தெரிகிறது. சித்தோடு கூடி, சித்தினால் ஸத்தை நீ அறிகிறாய் என்று இதற்கு அர்த்தம் பண்ணிக்கொண்டால் ஒரே தப்பாகிவிடும்! அத்வைதம் போய் த்வைதம் வந்துவிடும். ஏனென்றால் அப்போது 'ஸத்'தென்ற உன் ஸ்திதி ஒன்று, அதற்கு வேறாக இருந்துகொண்டு அதை அறிகிற 'சித்'தென்று இன்னொன்று என்று இரண்டு ஸமாசாரம் வந்துவிடும். உபத்ரவ ஹேதுவான இரண்டாவது ஸமாசாரமில்லாமல் பண்ணிக்கொண்ட நிலைதான் இது (ஸமாதி) என்று சொல்லிவிட்டு இப்படி (ஸத், சித் என்று இரண்டு இருப்பதாகச்) சொன்னால் தப்புத்தானே? ஆகையால், அப்போது அந்த ஸத்தும் சித்ததும்கூட ஒன்றாகவே ஆனவைதான். நீ சித்தோடு கூடி ஸத்தை அறியவில்லை. சித்தாகவே இருக்கிறாய். ஸத்தும் சித்துமாகிய 'ஸத்-சித்'தாக இருக்கிறாய். ஸத்-சித்தாக இருப்பதோடு, மனஸினாலே வருவித்துக் கொண்ட அத்தனை வித ஸம்ஸாரக்கட்டும் அறுபட்டுப்போன அந்தப் பரம ஸ்வதந்திரமான நிலை ஆனந்தமாக - பேரானந்தமாக - இருக்கும். சூனியமாய்ப் போவதில்லை; ஆனந்தமயமாக இருப்பதாயிருக்கும். வெளியிலிருந்து வராமல், ஆகையால் வெளி பாதிப்புகளுக்கு ஆளாகாமல், தன்னிலிருந்தே, தான் தானாக இருப்பதிலேயே ஏற்படும் சாச்வத ஆனந்தம்! வெளியிலிருந்து மனஸினால் பெற்ற ஆனந்தம் எல்லாமும் இந்த ஆனந்த ஸாகரத்தின் ஒரொரு திவலைதான். 'ஸத்சித்'துக்கு வெளியிலிருந்து வருகிற ஆனந்தமாயிருந்தாலும், சற்று முன் சொன்னபடி, த்வைதம் வந்துவிடுமாதலால், ஸத்-சித் ஆனந்தம் எல்லாமே ஒன்றுதான். நீ இப்படி ஸத்-சித் ஆனந்தமாக இருக்கும் பரிபூர்ண நிலைதான் பந்தத்திலிருந்து விடுபட்ட மோக்ஷ நிலை. சூன்யம் இல்லவேயில்லை!

அங்கே இரண்டாவது வஸ்து இல்லை என்னும்போது முக்யமாக ஒன்றைச் சொல்ல வேண்டும். 'பூலோகம், ஸ்வர்க்க லோகம் முதலியவற்றைவிட உசந்ததாக, ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிப்பதாக, ஸ்வாமி இருக்கும் மோக்ஷ லோகம் என்று ஒன்று இருக்கிறது. வைகுண்டம், கைலாஸம் என்பதெல்

லாம் அதுதான். அங்கே அவர் தன்கிட்டே ஒரு ஜீவனைக் கொண்டுபோய் சாச்வதமாக வைத்துக் கொள்வதுதான் மோக்ஷம்' என்றே பல ஸித்தாந்தங்கள் சொல்கின்றன. அதாவது மோக்ஷத்திலேயும் ஸ்வாமி, நாம் என்று இரண்டு உண்டு; ஸ்வாமிக்கு வேறேயாக நாம் இருக்கிறோம். நமக்கு வேறேயாக ஸ்வாமி இருக்கிறார் – என்பது அவற்றின் முடிவு. பக்தியாக, 'தியாலாஜிக'லாக 'ஸ்வாமி' என்று சொல்வதைத் தத்வ சாஸ்த்ரமாக, 'பிலாஸஃபி'யாகச் சொல்லும்போது 'பரமாத்மா' என்று சொல்லி, 'மோக்ஷம் உள்பட எப்போதுமே பரமாத்மாவும் ஜீவாத்மாவும் (ஜீவாத்மாதான் நாம்) வேறுதான். இவை இரண்டு ஆஸாமிகள்தான் – த்வைதம்தான்' என்பார்கள். ஸகல ஜீவ-ஜகத்துக்களுக்கும் காரண வஸ்துவான 'ப்ரம்மம்' என்பது தான் இந்தப் பரமாத்மா. அத்தனையையும் ஆட்டிப் படைத்து ஆள்வதால் 'ஈச்வரன்' என்பதும் அதைத்தான்.

ஆனால் அத்வைதப்படி: ஜீவனுக்கு மாயையினால் ஏற்பட்ட மனஸ் என்பது உள்ளபோதுதான் எல்லாவிதமான உலக அனுபவமும் உணர்ச்சிச் சஞ்சலங்களும் உண்டாகிறது என்றும், அவன் மனஸைக் கழற்றிப் போட்டுவிட்டு மாயைக்கு அந்தண்டை போய்விட்டால் ஒரே சாச்வத சாந்தியாய்ப் போய் விடுகிறானென்றும் பார்த்தோமல்லவா? இதே மாதிரி, இவனுக்கு அனுபவத்தைக் கொடுக்கிற உலகம், இவனுடைய மனஸ், மற்ற எல்லாருடைய மனஸுகள் – ஆகிய இவை அத்தனையையும்கூட ப்ரம்மம் மாயையால்தான் உண்டாக்கியிருக்கிறது. ஜீவனுக்கு மனஸு மாதிரிதான் ப்ரம்மத்துக்கு மாயை – மனஸு நம்முடைய நிஜமான நான் இல்லை என்கிற மாதிரியே ப்ரஹ்மத்துக்கும் மாயையோடு கூடியிருக்கும் நிலை ஸ்வ – ஸ்வரூபமில்லை. ப்ரஹ்மம் ஈச்வரனாக இருந்துகொண்டு, தான் ஆட்டிப் படைக்கிற பரமாத்மா என்றும் மற்றவர்கள் ஆட்டிப் படைக்கப்படுகிற ஜீவாத்மா என்றும் பண்ணுகிறதெல்லாம் தன் நிஜ ஸ்வரூபத்திலிருந்து கொண்டு பண்ணுவதல்ல. மனஸைக் கழற்றிப் போட்டுவிட்டால் நாம் சாந்திமயமாக, ஒரு கார்யமுமில்லாத ஆத்மாவாக இருக்கிற மாதிரியே ப்ரஹ்மமும் மாயையைக் கழற்றிப் போட்டுவிட்டுத் தானாக இருக்கிற நிலையில் உள்ளது. 'இது மாதிரி அது' என்பதைவிட, 'அது மாதிரி இது' என்பதுதான் ஸரி. ஏனென்றால் அது மாயை

யைக் கைக்கொண்ட பிறகுதான் ஜீவனுடைய தோற்றம், இவனுடைய மனஸ் எல்லாம் உண்டாகியிருக்கின்றன. இன்னம் இப்படி ஆலோசித்துப் பார்த்துக்கொண்டே போனால் 'அது மாதிரி இது', 'இது மாதிரி அது' என்று 'மாதிரி' போடுவதெல்லாமே தப்புதான். 'மாதிரி', 'கீதிரி' எதுவும் இல்லை. அதுவேதான் இது. ப்ரஹ்மமேதான் ஜீவன். மாயையில்லாத நிஜ நிலையில் ப்ரஹ்மமும் பரம சாந்தி, மனஸில்லாத நிஜ நிலையில் ஜீவனும் பரம சாந்தி என்றால் இரண்டும் ஒன்றுதானே? ப்ரஹ்மம் மாயையைப் போட்டுக்கொண்டு ஜகத்தைச் செய்து, அந்த ஜகத்திலே மனஸைப் போட்டுக் கொண்டிருப்பவனான ஜீவன் என்று ஒருவனைச் செய்திருக்கிறது என்றால் ப்ரஹ்மமே ஜகத்தாகவும், ஜீவனாகவும் தோன்றுகிறது என்றே அர்த்தம். ஜீவாத்மா என்கிறவனிடமிருந்து மனஸை எடுத்துப் போட்டுவிட்டால் ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறான். ஜீவாத்மா, பரமாத்மா என்று இரண்டு ஆத்மா இல்லை. ஒரே ஆத்மாதான். அதற்கே ப்ரஹ்மமென்று பேர்.

ஸ்வாமி என்று ஒருவர் வைகுண்ட, கைலாஸாதி லோகங்களில் நம்மைக் கொண்டுபோய் வைத்துக் கொள்ளும்போது அது எத்தனை உசத்தியாகத்தான் இருக்கட்டும், அவர் அங்கே கொடுக்கிற ஆனந்தம் எத்தனை பெரிசாகத்தான் இருக்கட்டும். எப்படியிருந்தாலும் அவரும் ஸரி, நாமும் ஸரி நிஜ ஸ்திதியில் இல்லை; ஸ்வ ஸ்வரூபத்தில் இல்லை. இரண்டு பேருமே சாந்த ஸமுத்ரமாக அப்படியே அடக்கியிருக்கிற நிச்சலன நிலையில் இல்லை. பக்தி என்று நாம் ஒரு கார்யம் பண்ணுகிறோம். அனுக்ரஹம் என்று அவரும் ஒரு கார்யம் பண்ணுகிறார். பக்தி பண்ண மனஸ் என்று ஒன்று இல்லாமல் முடியாது. அது விகாரங்களே இல்லாத மனஸாகத்தான் இருக்கட்டும், இருந்தாலும் அப்படியொன்று இருந்துதானாக வேண்டும். அது இருக்கிறதென்றால் நம்முடைய நிஜ ஸ்வரூபமான ஆத்மாவை விட்டுவிட்டு இதனிடமே நம்மை ஒன்றுபடுத்திக் கொண்டுவிடுகிறோம் – Identify செய்து கொள்கிறோம் – என்றுதான் அர்த்தம். இப்படி நாமே நிஜமான நாமாக இல்லாதபோது செய்யும் ஒன்று எத்தனைதான் உசத்தியாயிருந்தாலும் அது ஸத்ய ஸத்யமில்லை என்ற குறை இருக்கத்தானே செய்கிறது?

அதனால் பரமாத்மா நமக்குப் பரமானுக்ரஹம் பண்ண நினைக்கும்போது, 'இவனுக்கு நம்மை வேறேயாக வைத்துச் செய்கிற பக்திக் கார்யம்கூட வேண்டாம்; நமக்கும் இவனை வேறேயாக வைத்துச் செய்கிற அனுக்ரஹ கார்யம்கூட வேண்டாம்; ஏனென்றால், இவன் நமக்கு வேறேயாக இருக்கிறபோது வாஸ்வதத்தில் தனக்கே வேறேயான மனஸுடன்தான் ஐக்கியப்பட்டு, தானான ஆத்மாவை விட்டுவிடுகிறான். அப்படி வேண்டாம். நாமும் அனுக்ரஹம் என்ற கார்யம் பண்ணுவதற்காக மாயையை வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இதுவும் வேண்டாம். ஆனபடியால், நாம் இவனுடைய மனஸை அடியோடு போக்கி, இவனை நமக்குள்ளேயே ஆத்மாவாய், ப்ரஹ்மமாய் வைத்துக்கொண்டு விடுவோம்' என்று அத்வைத மோக்ஷம்தான் அனுக்ரஹிப்பார். ஸ்வாமி என்றும் பக்தன் என்றும் வேறாக இல்லை; ஜீவாத்ம – பரமாத்மாக்களும் வேறே இல்லை என்று பண்ணிவிடுவார். த்வைதமாக இரண்டாவது இல்லை என்கின்ற வேதாந்த ஸித்தாந்தத்தில் 'அத்வைதம்' என்று சொல்வது, இப்படிப் பக்தனும் பகவானும் – அதாவது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் – இரண்டு வேறு வஸ்துக்களில்லை என்பதைத்தான். ஜீவ-ப்ரஹ்ம அபேதம்தான் அத்வைதம்!

அதுவே மோக்ஷம். மோக்ஷ லோகம் என்று ஒன்றில்லை. மோக்ஷ அனுபவம்தான்.

அங்கே கார்யமே கிடையாது. கார்யம் செய்ய மனஸ் வேண்டும். மனஸ் வந்தால் ஆத்மாவாக இருக்கும் நிஜமான நிலை போய்விடும்.

இந்த மோக்ஷ அனுபவத்திற்கே ரூபமாக இருக்கும் தக்ஷிணா மூர்த்தி நம் கதை ஆரம்பிக்கும் ஸமயத்தில், 'நாம் கார்யமில்லாமல் இப்படி நிர்விசாரமாக உட்கார்ந்திருக்கிறோம். ஜனங்களானால் கார்யத்திலும் ஒரே தப்பான கார்யமாக பண்ணிக்கொண்டு கஷ்டப்படுகிறதுகளே, பிறரையும் கஷ்டப்படுத்துகிறதுகளே' என்று பரம கருணையோடு நினைத்தார்.

'கருணையோடு நினைத்தார்' என்றால் அவரும் மனஸினாலே கார்யம் பண்ணினார் என்றுதானே அர்த்தம்? அப்புறம்,

அவரை ஆத்மாவாகவே மோக்ஷானந்தத்தில் முழுகி நிஷ்க்ரிய மாக இருக்கிறவர் என்றால் என்ன அர்த்தம்?



## மாயா ஸஹிதனாயினும் ஈசன் ஞானியே!

**அ**வர் ஸமாசாரம் வேறே. அவர் நம் மாதிரி இல்லை, அவர் ஒரே ஸமயத்தில் மாயையோடேயும் சேர்ந்திருப்பார். தனித்து ஆத்மாவாகவும் இருப்பார். அவருடைய ஆதிக்கத்தி லுள்ள மாயை நமக்குத்தான் நம்முடைய ஆத்மா தெரியாத விதத்தில் மனஸ் என்ற தடுப்பைப் போட முடியுமேயொழிய அவருக்கே போட முடியாது. அதனால் அவர் எவ்வளவு மாயக்கூத்து அடித்துக்கொண்டு ஈச்வரனாக, அவருடைய நிஜ – நிலையில்லாத மாதிரி இருந்தாலும் அப்போதும் பூரண ஞானத்துடன் தான் ப்ரஹ்மமே என்ற அனுபவத்திலேயே உள்ளூற இருந்து கொண்டுதானிருப்பார். ஒரு யோகி ஸித்துகள் பண்ணி என்னென்னவோ மாயக்காட்சிகள் காட்டுகிறபோது, ஏன், ஒரு ஸாதாரண செப்பிடு வித்தைக்காரன்கூட 'மாஜிக்' செய்யும்போது, மற்றவர்கள்தான் அவற்றை நிஜமென்று நினைத்து மயங்குவார்களே தவிர, மாயைக்கு (மாயை என் றால் 'மாஜிக்' என்று அர்த்தம். அப்படிப்பட்ட மாயைக்குக்) காரணமான அந்த யோகியும் 'மாஜிக்-ஷோ'க்காரனும் அப்படி மயங்குவார்களா? இப்படித்தான் ஈச்வரன் – தக்ஷிணாமூர்த்தி யாக இருக்கப்பட்டவன் – லோக லீலை செய்வதும். ஆசார் யாளே சொல்லியிருக்கிறார்:

**மாயாவீவ விஜ்ரும்பயத்யபி மஹா யோகீவ**
**ய:ஸ்வேச்சயா**
**தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்**
**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே ॥**

அதெப்படி மாயா ஸஹிதனாக இருந்துகொண்டே மாயா ரஹிதனான ஞானியாயும் ஈச்வரன் இருப்பாரென்றால், இதற்கு ஒரே பதில், 'அவர் ஈச்வரனோல்லியோ? அதனால் அவர் எப்படியும் இருக்க முடியும். அதிலே இப்படி இருக்கிறார்' என்பது தான்! நம்மாலெல்லாம் செய்ய முடியாததைச் செய்பவர் தானே ஈச்வரன்? நம்மால் ஏதோ ஒரு மாதிரி இருக்க முடியா விட்டால், அது அவருக்கும் முடியாது என்று நாம் நினைப்பது எப்படி ஸரியாகும்? நம்மை அவர் இப்படியிப்படிப் பண்ணிப் போட்டிருக்கிறார். அதற்காக அவரும் இப்படியே இருக்க வேண்டும் என்று ஆகுமா? ஞானியையும் அவர்தான் பண்ணி யிருக்கிறார்; அஞ்ஞானியையும் அவரேதான் பண்ணியிருக் கிறார். அப்போது அவர் ஏன் இரண்டு பேர் மாதிரியும் ஒரே ஸமயத்தில் இருக்கக் கூடாது?

நிர்குணமான அவரேதான் தனக்குள்ளே ஸகுணமான பரா சக்தியை அடக்கிக் கொண்டிருக்கிறாரென்று பார்த்தோ மல்லவா? அதிலேயே எல்லாவற்றுக்கும் பதில் சொல்லியாகி விட்டது! முரண்பாடுகள் போலத் தெரியும் ஸகலமும் அங்கே ஸமன்வயப்பட்டுப் போய்விடுகின்றன.

அதனால், அவர் கருணையில் நினைக்கும்போதும் தன் னிலை பெயராமலேதான் இருந்தார். தன்னுடைய 'மாஜிக் ஷோ' இவ்வளவு கோணாமாணாவாகப் போய்க் கொண்டிருக் கிறதே என்று இரக்கம் கொண்டு அதை ஸரி செய்யணுமென்று நினைத்தார்.

எதையாவது பண்ணி ஹிம்ஸையில் மாட்டிக் கொண்டிருக் கும் ஜனங்களிடம் போய் எதையும் பண்ணாமலிருக்கிற அத்வைதத்தைச் சொல்ல வேண்டுமென்று ஸங்கல்பம் செய்து கொண்டார்.

'அவ்வளவு சட்டென்று எல்லாரும் ஒன்றும் பண்ணாமலி ருக்கும் வழிக்கு வரத்தான் மாட்டார்கள். கார்யம் பண்ணுவது தான் கஷ்டம். கார்யம் பண்ணாமல் அக்கடாவென்று உட் கார்ந்து கொண்டிருப்பது ஸுலபம் என்று வெளிப்பார்வைக் குத் தோன்றுகிறது. ஆனாலும் நடைமுறையில் தூக்கம் என்று கொஞ்ச நாழி அடித்துப் போடுகிறது போக, மற்றபடி கார்ய மில்லாமல் உட்கார்ந்திருப்பதுதான் மஹா கஷ்டமாயிருக்கும்!

மனஸ் சும்மா இருக்கவிடாது. ஒன்று மாற்றி ஒன்று எதையாவது பண்ணிக் கொண்டிருக்கும்படி அது ஏவிக்கொண்டே இருக்கும்.

'ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்'★

– 'ஒருபோதும், ஒரு க்ஷணங்கூட எவனும் ஒரு கார்யமும் செய்யாதவனாக இருப்பதேயில்லை!' என்று பகவான் ஜனங்களுடைய 'பல்ஸை' நன்றாகப் பிடித்துப் பார்த்துத்தான் சொன்னார்.

'கையால், காலால் கார்யம் செய்யாமல் சும்மா இருப்பதே கஷ்டம் என்றால், அத்வைதத்தில் ஒன்றும் பண்ணாமலிருக்க வேண்டும் என்னும்போதோ, இதைவிடக் கஷ்டமாக – 'கஷ்டமாக' என்று சொன்னால் போதாது; 'ஸாத்யமே இல்லாதது' என்று தோன்றுவதாக – மனஸினாலேயும் எதையும் நினைக்கவே கூடாது என்று இருக்கிறது. இப்படிச் சொல்லியிருப்பதை யார் கேட்பார்கள்?

'கேட்பார்களோ, கேட்க மாட்டார்களோ? நாம் ஓயாமல் சொல்லிக்கொண்டே லோகம் பூரா போய்க் கொண்டேயிருக்க வேண்டியதுதான். இப்படி 'விடமாட்டேன்' என்று அஹோராத்ரம் அதுவே கார்யமாகச் சொல்லிக் கொண்டேயிருந்தால் தானே ஆயிரத்தில் ஒருத்தராவது கேட்கத்தான் செய்வார்கள். பிற்காலங்களில் வரப்போகிறவர்களுக்காகவும் எழுதி வைத்துவிட்டால், தலைமுறைக்குத் தலைமுறை இப்படி ஆயிரத்தில் ஒருத்தர் அந்தப்படி கேட்டுப் பண்ணாமல் போகமாட்டார்கள். இப்படி ஆயிரத்தில் ஒருத்தர் – அதுகூட ஜாஸ்தியாயிருக்கலாம்; லக்ஷத்தில், பத்து லக்ஷத்தில் ஒருத்தர் – ஒன்றும் பண்ணாமல் சும்மா இருந்துகொண்டு பந்த மோசனம் (ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை) பெற்றுவிட்டால்கூடப் போதும். இத்தனை கோடானுகோடி ஜீவராசிகளைக் கொண்ட ஸ்ருஷ்டி வீணாகவில்லை, பழமாகப் பழுத்துவிட்டது என்று ஆகிவிடும்.

'பாக்கிப் பேர் கர்மாவில், பக்தியில்தான் போக முடியும். பக்திகூடக் கனிந்த பக்தியாக – லோகத்தில் ஸகலத்திடமும் வைராக்யம், ஈச்வரன் ஒருவனிடம் மட்டும் பரம ப்ரேமை

---

★ கீதை III.5

என்றிருக்கும் கனிந்த பக்தியாக – ரொம்பப் பேரிடம் இருக்க முடியாது. அதனால் பரவாயில்லை. இப்போது ஒரே அவைதிகமாகப் போயிருக்கிற மாதிரி இல்லாமல், ஜனங்கள் வேத சாஸ்த்ரப்படி முடிந்த மட்டும் கர்மா பண்ணி, ஒரு பூஜை, ஒரு கோயிலுக்குப் போவது, ஒரு க்ஷேத்ராடனம் என்று செய்ய ஆரம்பித்தாலும்கூடப் போதும்.

'இதற்கெல்லாமும் நாம்தான் பூலோகத்தில் பிறந்து ஓர் ஊர் விடாமல் சுற்றிச் செய்ய வேண்டியதை எல்லாம் செய்ய வேண்டும். வர்ணாச்ரம விபாகப்படி கர்மா நடக்கப் பண்ண வேண்டும். வைதிகமாக உபாஸனா மார்க்கங்களைச் சுத்தம் செய்து கொடுக்க வேண்டும். க்ஷேத்ரங்களில் நல்ல ஸான்னித்யமும் ஜனாகர்ஷணமும் இருக்கும்படியாக யந்த்ர ப்ரதிஷ்டைகள் செய்ய வேண்டும்.

'ஆனாலும் இதெல்லாம் பண்ணுவதோடு – இதற்கெல்லாம் மேலாக – இத்தனை பண்ணிக் கொண்டிருந்தாலும், ஒன்றும் பண்ணாமலிருப்பதுதான் முடிவான லக்ஷ்யம் என்றும் ஓயாமல் ஞாபகப்படுத்தி, 'என்றைக்கோ ஒரு நாளிலாவது நாமும் அந்த வழியில் – ஞான மார்க்கத்தில் – போய்ச் சேரத்தான் வேண்டும்' என்று ஜனங்கள் விரும்பும்படியாகத் தூண்டிக் கொண்டே இருக்க வேண்டும். அது ரொம்பப் பேருக்கு ச்ரமஸாத்யமாயிருந்து அவர்கள் அதில் போகாமலே வேண்டுமானாலும் இருக்கட்டும். 'போகாமலே வேண்டுமானாலும்' என்ன? அதற்கான பக்வம் அடையாத மட்டும் 'போகப் படாது' என்பதுதான் நம்முடைய (அதாவது, ஈச்வரனுடைய) கட்டளையே! முடியாத கார்யத்தில் யத்தனம் பண்ணித் தோற்றுப்போக வேண்டாம். தோற்றது தெரியக்கூடாது என்று ஜயித்த மாதிரி, 'ஹிபாக்ரிஸி' பண்ண வேண்டாம் என்று தானே, எவருக்கும் முடியக்கூடியதாக 'ப்ரவ்ருத்தி மார்க்கம்' என்று ஒன்றைப் பிரித்து வைத்து, 'இதிலேயே போங்கள். போய் இதில் ஸித்தியடைந்து சித்தசுத்தி பெற்ற பிற்பாடுதான் நிவ்ருத்தி மார்க்கம்' என்று ஆக்ஞை செய்திருக்கிறோம்?

'ஆனால், இப்போது, உடனேயேதான் போகப்படாதே தவிர, சித்தத்தைப் பரிசுத்தி செய்துகொண்டு, அதன் பிறகு, எத்தனையோ வருஷங்கள், ஜன்மங்களுக்கு அப்புறமாவது

அதில் (நிவ்ருத்தியில்) போனால்தானே கதிமோக்ஷம்? ஸம் ஸாரச் சுழலிலிருந்து தப்பி சாச்வத ஸௌக்யத்தைப் பெற அதைவிட்டால் வேறே வழி இல்லையே! ஆனபடியால், எதுதான் முடிவான லக்ஷ்யமோ, எதுதான் பரம ஸத்யமோ, எதுதான் நித்யானந்தமோ, எதை உபநிஷத்துகளில் கோஷித் தால்தான் வேதங்களுக்கே பெருமையோ அது என்னவென்று இப்போதிலிருந்தே எல்லோரும் காதால் கேட்டுத் தெரிந்து கொள்ளவாவது வேண்டுமோ வேண்டாமோ? அதற்காகத் தான் (தற்போது எடுக்கப் போகிற அவதாரத்தில்) கர்மா என்றும், உபாஸனை என்றும் எத்தனைதான் பண்ணச் சொன் னாலும் அதைவிட அதிகமாக ஞானத்தை – கர்மா, பக்தி முதலான எதுவுமே பண்ணாமலிருக்கிற, ஒண்ணுமே பண்ணா மலிருக்கிற பரம நிலையை – சொல்லிக்கொண்டே போக வேண்டும். அப்போதுதான் (அதைப் பின்பற்றுவதற்கு) அந்த ஆயிரத்தில், லக்ஷத்தில் ஒருவனாவது தோன்றுவான்.

'அத்தனை கர்மாக்களையும் நன்றாக, விடாமல் பண்ணு: **கர்ம ஸ்வநுஷ்டீயதாம்**★ என்று ஆரம்பித்தாலும் அதைக் கொஞ்சம் கொஞ்சமாக் ஈச்வரோபாஸனையாக்கிக் கொள்: **தேநேசஸ்ய விதீயதாம் அபசிதி:**. காம்யமாகப் பண்ணுவதிலி ருந்து நிஷ்காம்யமாகப் பண்ணும் யோகத்துக்குப் போ: **காம்யே மதிஸ் – த்யஜ்யதாம்**. இப்படி முன்னேறிக்கொண்டே போய் ஸத்ஸங்கத்திலேயே இருக்க ஆரம்பி: **ஸங்க: ஸத்ஸு விதீயதாம்**. அசட்டுப் பக்தி, 'அது வேணும், இது வேணும்' என்று கேட்கும் பக்தியிலிருந்து முன்னேறி பகவானிடம் நிஜமான பக்தியை உறுதியாக் வளர்த்துக் கொள்: **பகவதோ பக்திர் த்ருடாதீயதாம்** என்றெல்லாம் ஜனங்களுக்குச் சொல்லிக் கொண்டே போனாலும் முடிவான லக்ஷ்யத்தை மறக்கவிடக் கூடாது. அதைச் சொல்லாமல் விடக்கூடாது. இப்படியே போய்க் கொண்டிருந்தால் என்றைக்காவது ஒரு நாளாவது உனக்கு சித்த பரீபாகம் (பரிபக்குவம்) ஏற்படும். அப்போது நிவ்ருத்தி மார்க்கக் குருவிடம் போய், விடாமல் பாத ஸேவை செய்து உபதேசம் – ப்ரணவோபதேசம், உபநிஷத்தின் ஜீவ-ப்ரஹ்ம அபேத மஹாவாக்ய உபதேசம் – வாங்கிக்கொள்' என்றும் சொல்ல வேண்டும்.

---

★ இதுவும், இப்பாராவில் தொடர்ந்து வரும் எல்லா மேற்கோள்களும் ஸ்ரீ சங்கரரின் 'ஸோபாந பஞ்சக'த்தில் வருவனவாகும்.

**ஸத்வித்வான் உபஸ்ருப்யதாம் ப்ரதிதினம் தத்பாதுகா ஸேவ்யதாம்**

**ப்ரஹ்மைகாக்ஷரம் – அர்த்யதாம் ச்ருதிசிரோ வாக்யம் ஸமாகர்ண்யதாம்**

'**ப்ரஹ்மாஸ்மீதி விபாவ்யதாம்**: 'நானே ப்ரஹ்மம்' என்ற பாவனையை ஏற்படுத்திக் கொண்டு அப்புறம் பாவனை அனுபவமாகவே நன்றாக முற்றி, நீயே பரப்ரஹ்மமாகவே நிற்க வேண்டும்; **பரப்ரஹ்மாத்மநா ஸ்தீயதாம்** என்று நம் உபதேசத்தை முடிக்க வேண்டும். அங்கே ஒன்றும் பண்ண வேண்டாம். ஒன்றின் உறவும் வேண்டாம். எல்லாக் கார்யத்துக்கும் முழுக்குப் போட்டுவிட்டு ஏகாந்தத்தில் ஸௌக்யமாக இருக்க வேண்டியது; மனஸைக் கழற்றிப் போட்டுவிட்டு ஆத்மாவையே அனுபவித்துக் கொண்டு சும்மாக் கிடக்க வேண்டியது – **ஏகாந்தே ஸுகமாஸ்யதாம்... பூர்ணாத்மா ஸுஸமீக்ஷ்யதாம்.**

'ஏதாவது பண்ணிக்கொண்டே யிருக்கும் இயல்புடையவர்களான கர்ம ஸங்கிகளை முதலில் தப்புப் பண்ணாமல் நல்லது பண்ணும்படியாகக் கர்மானுஷ்டானம், ஈச்வர பூஜை என்று ஈடுபடுத்த வேண்டியுதுதான். ஆனாலும் நல்லது, நல்லது என்று நினைத்துக் கொண்டிருக்கிற இந்த எல்லாவற்றிலுங்கூடக் கெடுதலாக ஏதாவது கலந்து கலந்து வந்துகொண்டே தானிருக்கும். கார்யம் என்றால் முழுக்க நல்லதாக இருக்கவே முடியாது. எதற்காவது ஹிம்ஸை, யாருக்காவது கஷ்டம், எதுவாவது நஷ்டம் என்று ஏற்படுத்தாமல் ஒரு கார்யமும் இல்லை. எந்த ஸத்கார்யமானாலும்கூட இப்படித்தான். எத்தனைதான் நல்லதை நினைத்துப் பரோபகாரம், பரமோபகாரம் பண்ணுவதாகப் பெருமைப்பட்டுக் கொண்டு செய்வதிலும் நல்லதற்கில்லாத அம்சங்களும் கொஞ்சமாவது கலந்து கலந்துதான் வரும்...'

(தக்ஷிணாமூர்த்தியின் சிந்தனையாக இதுவரை பேசி வந்தவர்கள், ஒரு சிறிய இடைவெளி கொடுத்துத் தம்முடைய கூற்றாக ஆரம்பிக்கிறார்கள்.)

கார்யமென்று ஏற்பட்டால், அதிலே உசத்தியான கார்யம்

எது? கர்மத்தைக் கழித்துக் கொள்வதற்காகவே ஸ்வய நலம் கருதாமல், பரநலம் மட்டுமே கருதிச் செய்கிற கார்யம்தான்; இதுதான் கர்மாவையே போக்கிக்கொள்ள உதவுகிற கர்ம யோகம் என்று சொல்கிறார்கள். ஆனால் கலப்படமில்லாமல் இப்படிப் பரநலம் மட்டும் எந்தக் கார்யத்தினாலாவது பண்ண முடியுமா என்று பார்த்தால் அப்படி எதுவுமே தெரிய வில்லை! எந்தக் கார்யமானாலும் அதில் நல்லதோடு கெடுத லும் – பரநலத்தோடு ஹிம்ஸையும் – இருப்பதாகவே தெரி கிறது.

'லோக க்ஷேமத்துக்காக யுத்தம் பண்ணு' என்று கர்மயோ கத்தை உபதேசம் செய்து அர்ஜுனனின் பிடரியைப் பிடித்துப் பகவான் தள்ளி, அந்தப்படியே அவனும் பண்ணினானே? அதனால் கலப்படமேயில்லாமல் – unmixed, unalloyed என்கி றார்களே, அப்படிப்பட்ட – ஸர்வ க்ஷேமமா வந்தது? எத்தனை மஹாவீரர்கள், அபிமன்யு மாதிரி யுவாக்கள், நல்லதெல்லாம் தெரிந்த பீஷ்மர்சார்யார் மாதிரியான பெரியவர்கள் சாகும்படி யாயிற்று? ரத்த வெள்ளம், கைகால்கள் மீன் மாதிரி (அதில்) மிதந்துகொண்டு, அறுபட்ட சிகை பாசி மாதிரி படர்ந்து கொண்டு – என்று யுத்த வர்ணனையைப் படிக்கும்போதே ரத்தம் சில்லிட்டுப் போகிறது! இதுவா லோகக்ஷேமம் என்று தோன்றுகிறது! யுத்தம் முடிந்ததும் பெரிய லோக க்ஷேமம் ஏற்பட்டுவிட்டதென்று எவரும் பூரித்துப்போய் ஸந்தோஷம் கொண்டாடினதாகத் தெரியவில்லை. 'புருஷனை, புத்ரனை, பந்துமித்ராளை இழந்து ஸ்த்ரீகளும் அவாளும் இவாளும் கலங்கிக்கொண்டு கதறிக்கொண்டு தர்ப்பணம் பண்ணப் போனார்கள்; வெற்றிபெற்று ராஜாவான தர்மபுத்ரரானால் எல்லாரையும்விடப் பெரிசாக அழுதுகொண்டு, 'இத்தனை நாசத்துக்கும் நான் காரணமாயிருந்தேனே! (கர்ணனை நினைத்து) ப்ராத்ருஹத்தி செய்துவிட்டேனே!' என்று நொந்து கொண்டார்; த்ரௌபதியோ அத்தனை பிள்ளைகளையும் பறிகொடுத்துவிட்டு வயிற்றில் அடித்துக்கொண்டாள் என்று தான் பார்க்கிறோம்.



# உபகாரப் பணியிலும் அபகாரம்!

**யு**த்த கார்யந்தானென்றில்லை. ரொம்பவும் ஸாத்விகமாக ஒரு நல்லது செய்யப் போனால்கூட ஒருத்தருக்கு உபகாரமென்று செய்வது வேறு யாராவது ஒருத்தருக்கு ஏதாவது அபகாரம் செய்துவிடுகிறது.

நான் ஒன்று நினைத்துக் கொள்வதுண்டு: – மில் துணி பஹிஷ்காரம் பண்ணிக் கதரை அபிவிருத்தி பண்ண வேண்டுமென்று காந்தி தீவ்ரமாக இருந்த காலம். சீமையிலிருந்துதான் அப்போது மில் துணி வரும். ஆகையினால் மில் துணி பஹிஷ்காரம் என்பதில் 'ஒரு கல்லில் இரண்டு மாங்காய்' என்கிற மாதிரி இரண்டு லக்ஷ்யங்கள் பூர்த்தி ஆயின: ஸ்வதேசியத்தை ஆதரித்து விதேசியத்தை பஹிஷ்கரிப்பது என்பது ஒன்று; Manpower-ஐ (மனித சக்தியை) ஆதரித்து மெஷின் பவரை எதிர்ப்பது என்பது இன்னொன்று.

இந்தக் கொள்கைகளில் எனக்கும் அபிமானம் உண்டு. அப்போது★ ராமேச்வர யாத்ரை போயிருந்தோம். இந்த நல்ல ஸமயத்தில் மடத்துச் சிப்பந்திகளையெல்லாம் ஆலைத் துணியை விட்டுவிட்டுக் கதர் உடுத்தும் பழக்கத்தை மேற்கொள்ளச் செய்ய வேண்டும் என்று தோன்றிற்று. அக்காலத்திலே அங்கங்கே மில் துணிகளைச் சொக்கப்பனை மாதிரிக் கொளுத்தி ஸ்வதேசி அபிமானிகள் விழா நடத்துவது வழக்கம். எனக்கென்னவோ, அசேதனமான துணிதான் என்றாலும் அதைக்கூட நெருப்பில் போட்டுக் கொளுத்துவது என்றால் ஹிம்ஸை மாதிரி தோன்றிற்று. இப்படியில்லாமல், ஸாத்விகமாக, குளிர்ச்சியாக, 'ஜலஸமாதி' என்று சொல்கிறார்களே, அப்படி ஆலையில் உற்பத்தியான வஸ்திரங்களை

★ *1922-ல்*

ஸமுத்ரத்தில் போட்டுவிட்டு, (மடத்துச் சிப்பந்திகள்) எல்லாரையும் கதர் கட்டிக்கொள்ளும்படிப் பண்ணலாமென்று நினைத்தேன். அப்படியே தனுஷ்கோடியில் எல்லாரும் ஸ்நானம் செய்தவுடன், மில் துணி உடுத்திக் கொண்டிருந்தவர்கள் அதை ஸமுத்ரத்திலே போட்டுவிட்டுக் கதர் கட்டிக் கொள்ள ஆரம்பித்தார்கள். மதுரையிலிருந்து இதற்காக நிறையக் கதர் வஸ்த்ரங்கள் தருவித்திருந்தோம். தலா இரண்டு ஜோடி கதர் சோமனும் (வேஷ்டியும்) மேல்வேஷ்டியும் கொடுத்தது.

கைத்தொழிலை ஆதரிப்பது, manual labour (உடலுழைப்பு) என்றால் மட்டமாக நினைக்காமல் யாராயிருந்தாலும் ராட்டினத்தைச் சுற்றி நூற்பது, அதனாலேயே வீண்பேச்சு முதலியவற்றில் போகாமல் ஒரு டிஸிப்ளினில் வருவது, நம் தேசத்துக்கு என்று என்ன உண்டோ அதோடு த்ருப்தியாயிருந்து, விதேசச் சரக்குகளில் மோஹத்தை விட்டு நம்முடைய பண்பாட்டைக் காப்பாற்றுவது, நம் நாட்டுப் பணம் அநியாயமாக வெளிதேசத்துக்குப் போகாமல் தடுப்பது, பல ஏழைகளுக்கு ஜீவனோபாயம் கிடைக்கப் பண்ணுவது – என்று இத்தனை அம்சங்கள் மில் துணியை பஹிஷ்கரித்துக் கதரை ஆதரிப்பதில் இருக்கிறதல்லவா? அதனால் இது ரொம்ப நல்ல திட்டமாகத்தானே தெரிகிறது?

ஆனால், இப்படிப் பண்ணினால் தங்கள் வியாபாரமே போய்விடும், தாங்கள் தலையில் துணியைப் போட்டுக் கொள்ளும்படியாகிவிடும் – (சிரித்து) தாங்கள் உற்பத்தி செய்யும் துணியை விற்று லாபம் பண்ணாமல், தாங்களே தலையில் துணியைப் போட்டுக் கொள்ளும்படியாகிவிடும்! – என்று லங்காஷயர், மான்செஸ்டர் மில்காரர்களெல்லாம் 'கூ..கூ..' என்று கூப்பாடு போட்டார்கள். முதலில், 'அதற்காக அப்பாவி இண்டியன்தான் அகப்பட்டானா, தலையிலே கைவைக்க?' என்றுதான் தோன்றிற்று. அப்புறம் யோசித்துப் பார்த்ததில், 'வெள்ளைக்காரர்கள் வஞ்சகமாக வ்யாபார ஸாமர்த்யங்கள் செய்து அமிதலாபம் பண்ணுவதும், வ்யாபாரம் என்று ஆரம்பித்துத் தங்களுடைய வாழ்க்கை

முறை, ஆட்சி ஆகியவற்றையும் பிற தேசங்களில் விஸ்தரித்து, அவற்றின் வயிற்றிலடித்துத் தங்களைப் போஷாக்குப் பண்ணிக் கொள்வதும் மஹா தப்புத்தான். என்றாலும், அவர்கள் தேசத்தில் கறுப்பு நிலக்கரியையும் வெளுப்புச் சாக்குக் கட்டியையும் விட்டால் வேறே விளைபொருள் கிடையாதே! ஆனதால் அவர்கள் ஆலைத் தொழில் பண்ணி ஏற்றுமதி செய்து, பிற தேசங்களிடமிருந்துதானே தங்களுடைய எல்லா வாழ்க்கைத் தேவைகளுக்குமானதை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும்? இதில் ஒரு 'அயிட்ட'மாக வெளிதேசத்துப் பருத்தியை அவர்கள் தருவித்து நூலாய் நூற்றுத் துணியாகப் பண்ணி ஏற்றுமதி செய்வதையும் அடியோடு தப்பு என்று சொல்ல முடியாது போலிருக்கே! அவர்கள் ஆசைப்படுகிற மாதிரி, 'இதில் தாங்களே ஏகபோக்கியம் பெற்று அமிதலாபம் எடுக்க வேண்டும்; அந்தந்த தேசத்து நெசவாளிகள் நாசமாகப் போனாலும் போகட்டும், தாங்கள்தான் வ்ருத்தியாக வேண்டும்' என்பது ந்யாயமே இல்லையென்றாலும், ஏதோ ஓர் அளவு, ஒரு quota அவர்களுக்கும் விட்டுக்கொடுத்து, அவர்கள் மில்களை நடத்தவிட்டால்தானே அந்த ஜனங்களும் வாழமுடியும் போலிருக்கிறது?' என்று தோன்றிற்று.

இங்க்லாண்ட் மாதிரியேதான் இன்னும் சில தேசங்களும். ஏற்றுமதி பண்ணினால்தான் அவற்றைச் சேர்ந்த ஜனஸமூஹங்களுக்கு ஜீவனோபாயம் கிடைக்கும். அதைக் கொண்டுதான் அவர்கள் வாழ்க்கைக்குத் தேவையான பண்டங்களை இறக்குமதி செய்துகொள்ள முடியும். ஆனபடியால் இந்தியா, சைனா மாதிரிப் பெரிய தேசங்களில் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாப் பண்டங்களையும் ஸ்வதேசியமாகவே பண்ணிச் சமாளித்துக் கொண்டுவிடுவது, self sufficiency (தன்னிறைவு) பெற்று ரொம்பவும் அத்யாவச்யமான இறக்குமதியோடு நிறுத்திக் கொண்டுவிடுவது என்று வைத்துவிட்டால் ஏற்றுமதியையே நம்பி உயிர் வாழ்கிற தேசத்து ஜனங்கள், பாவம், என்ன பண்ணுவார்கள்? லங்காஷயர்க்காரன் 'கூ..கூ..' என்று கத்துவதில் அடாவடி இருக்கத்தான் செய்கிறதென்றாலுங்கூட, நாமும் ஸ்வதேசியக் கொள்கையில் ரொம்பக் கடுமையாக இருந்தால் அதனால் 'ஜெனுவி'னாகவே சிலபேர் கஷ்டத்துக்கு ஆளாகும்படிதானே ஆகும் போலிருக்கிறது?' என்று

தோன்ற ஆரம்பித்தது.

அதற்கப்புறம், என்னைப் பொறுத்தமட்டில் மில் துணி வேண்டாம் என்று வைத்தது வைத்ததுதான் என்று ஆக்கிக் கொண்டுவிட்டாலும் மற்றவர்கள் விஷயமாக எதுவும் 'கம்ப்பெல்' பண்ணவேண்டாமென்று விட்டுவிட்டேன்.

எதற்குச் சொல்லவந்தேன் என்றால், நம் தேச ஜனங்களின் தொழில் கெட்டுப் போகப்படாது, நம் பணம் அந்யாயமாக வெளியூருக்குப் போய் அவன் கொழுக்கப்படாது – நம்மை இளைக்கப் பண்ணி அவன் கொழுக்கப்படாது – என்பதற்காக ஒரு நல்ல ஏற்பாடு செய்தால், அதனாலுங்கூட 'ஜெனுவி'னாகவே எவனாவது பாதிக்கப்படுகிறான்!

வெளி தேசத்துக்காரன்தான் என்றில்லை, கதர் கதர் என்று அதையே ஆதரிப்பதென்றால் உள்ளூரிலேயே கைத்தறிக் காரன், மில்காரன் தன் தொழில் போச்சு என்று அழுகிறான், ஆக்ஷேபம் பண்ணுகிறான்.

கைத்தொழிலுக்கு நல்லது செய்யப்போனால் ஆலைத் தொழிலுக்குக் கெடுதல் ஏற்படுகிறது. ஆலைத்தொழிலுக்கு நல்லது செய்யப்போய், அதில் வேலை செய்கிற ஆயிரம் பேருக்கு நல்லது ஏற்படுத்தும்போதோ பத்தாயிரம், இருபதாயிரம் கைத்தொழில்காரர்களின் வயிற்றிலடிக்க வேண்டி வருகிறது!

இத்தனை லிஜிஸ்லேஷன்கள் (சட்டங்கள்) கொண்டுவரப் பட்டிருக்கின்றனவே, இவை அத்தனையும் யாருக்கோ நல்லது செய்யும் உத்தேசத்தில் கொண்டு வந்ததுதானே? ஆனால் எந்த லெஜிஸ்லேஷனாவது எதிர்ப்பு இல்லாமல் பாஸாகி இருக் கிறதோ? வாக்-அவுட், டெமான்ஸ்ட்ரேஷன், ஹர்த்தால் என்று போகிற அளவுக்கல்லவா எதற்கும் ஆப்போஸிஷன் வருகிறது?

என்ன அர்த்தம்?

எந்த நல்ல திட்டம் கொண்டு வந்தாலும் அதுவும் யாருக்கோ கெடுதல் செய்கிறது என்றுதான் அர்த்தம்!

அத்தனை அரசியல் கட்சிகளும் நல்லது செய்யத்தான்

ஏற்பட்டிருப்பதாக அர்த்தம். அரசியல் கட்சிகளை மட்டும் சொல்வானேன்? அத்தனை மத ஸம்ப்ரதாயங்களும் நல்லதற் காகவேதான் ஸ்தாபிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் கட்சிக்குக் கட்சி, மதத்துக்கு மதம் சண்டையான சண்டை என்றால், யார் சொல்வது நல்லது, யார் சொல்வது கெட்டது? ஸமூஹ விஷயத்தில் (லௌகிகமாக) இதுதான் நல்லது என்று ஒரு வழியை மட்டும் வைக்க முடியாததால்தான் இத்தனை கட்சிகள் தோன்றியிருக்கின்றன. அப்படியே ஆத்மார்த்தமாக வும் இதுதான் நல்லது என்று ஸர்வ ஜன ஸம்மதமாக ஒன்றைக் காட்ட முடியாததால்தான் இத்தனை மதங்கள் தோன்றியிருக் கின்றன. எந்தக் கட்சியானாலும், மதமானாலும் அதனால் யாருக்கோ லோக ரீதியான வாழ்க்கையிலோ, மனோரீதியான அனுபவத்திலோ கஷ்டம் ஏற்படுவதால்தான் எதிர்ப்பு, சண்டை, குஸ்தி ஏற்படுகிறது!

ஸனாதனிக்கு நல்லது பண்ணினால் சீர்திருத்தவாதி 'லபோ லபோ' என்கிறான். சீர்திருத்தவாதிக்கு ஸாதகமாகப் பண்ணி னால் ஸனாதனி சபிக்கிறான்; இவன் சபிப்பது மட்டுமில்லை – 'ரிஷிகள் எல்லாம் சபிப்பார்கள். தெய்வ சாபமே வந்துவிடும்' என்கிறான்.

ஒரு பாஷையை அபிவ்ருத்தி செய்தால் இன்னொரு பாஷை க்ஷீணிக்கிறது!

பண்ணையாளுக்கு நல்லது பண்ணினால் நிலச் சொந்தக் காரனுக்குக் கெடுதலாகிறது.

முன்னேறிய வர்க்கம், பின்னேறிய வர்க்கம் என்று பிரிவு செய்திருப்பதில் ஒன்றுக்கு நல்லது பண்ணுவதில் இன்னொன்று படும் அவஸ்தைகள் எல்லாருக்கும் தெரிந்ததுதான்.

'இது நல்லது' என்று ஒரு கட்சி, 'அப்படியில்லை' என்று இன்னொரு கட்சி என்பதாகப் பிரிந்து நிற்பதற்கிடமில்லாமல், ஸர்வ ஜனங்களும் ஏக மனதாக, 'இது நல்லதுதான்; இந்த ஸத்கார்யத்தினால் யாருக்கும் எந்தக் கெடுதலும் வராது' என்று நினைத்துப் பண்ணுகிறவற்றில்கூட ஓர் அஞ்சு, பத்து பெர்ஸென்டாவது கெடுதி வந்து சேராமலிருப்பதில்லை.

கோயில் கட்டுவதைவிட நல்ல கார்யம் லோகத்தில் இல்லை. அதிலேகூட பெரிய பெரிய பாறாங்கல்லுகளைக் கொண்டுவந்து இறக்குவது, அவற்றைத் தூக்கி நிறுத்திக் கோபுரம் கட்டுவது என்கிறபோது மாடுகளுக்கும், ஆள்களுக் கும் முழி பிதுங்கி, முதுகு ஒடிகிற மாதிரி ச்ரமம் ஏற்படுகிறது. ரதோத்ஸவத்தில் தேர்க்காலில் அரைபட்டு எவனோ ஒருத்தன் உயிரை விடுகிறான்.

கோயில் கட்டுவதுகூட, ஸர்வஜன ஸம்மதமான நல்லது என்று இக்காலத்தில் சொல்ல முடியாது. 'எதற்குக் கட்டணும்? இருப்பதையும் இடிக்கணும்' என்று அதற்கும் எதிர்க்கட்சி இருக்கலாம்! ஆஸ்பத்திரியும் ஸ்கூலும் வைப்பதுதான் இப்போது ஸர்வ ஜன ஸம்மதம். வாஸ்தவமாகவே ஜனங்களின் சரீர உபாதைகளைப் போக்குவதும், அவர்களுக்குக் கல்வியறிவு தருவதும் உத்தமமான பணிகள்தான். சாஸ்த்ர, புராணங்களிலும் இவற்றை நிறையச் சொல்லியிருக்கிறது. ஆனாலும் இவைகூட முழுக்க, unmixed-ஆக நல்லது மட்டுந் தான் செய்பவையா என்று யோசித்துப் பார்த்தால், இல்லை என்றே தெரியும். துஷ்டத்தனமான மனப்போக்குள்ள ஒருத்தன் நோயாளியாக இருப்பதாலேயே தான்பாட்டுக்கு முடங்கிக் கிடப்பான். நல்லது செய்வதாக நினைத்து அவனுக்கு வைத்யம் பார்த்து த்ருடசாலியாக ஆக்கப்போக, அவன் கன்னக் கோலையோ, கத்தியையோ தூக்கிக்கொண்டு போய் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்துவிடுவான். எதுவும் தெரியாமல் ஸாதுவாகத் தன்பாட்டுக்கு ஏதோ ஒரு மூட்டை தூக்கிப் போட்டுவிட்டுக் கஞ்சி காய்ச்சிக் குடித்துக் கொண்டி ருப்பவனுக்கு அறிவு ப்ரகாசம் உண்டாக்குவதாக நினைத்து கல்வி தரப்போக, அவன் இல்லாத குயுக்தி எல்லாம் செய்யக் கற்றுக்கொண்டு, ஃபோர்ஜரிப் பத்திரம் எழுத ஆரம்பிக்கலாம்!

நல்லதையெல்லாம் தள்ளிவிட்டுக் கெடுதலை மட்டும் பார்த்துப் பெரிசுபடுத்துவதற்காகச் சொல்லவில்லை. எதிலும் கெடுதல்தான் ஜாஸ்தி என்றும் சொல்ல வரவில்லை. அஞ்சு பெர்ஸென்ட், பத்து பெர்ஸென்ட் என்று (கெடுதலைக் குறை வாகத்) தானே முதலிலேயே சொன்னேன்? இன்னம் குறைவாக ஒரு பெர்ஸென்ட், அரை பெர்ஸென்ட் என்று வேண்டுமானா

லும் வைத்துக் கொள்வோம். ஆனாலும் கார்யம் என்று வந்தால் நூறு பெர்ஸென்டும் நல்லதாகவே இருக்க முடியாது என்பதுதான் உண்மை என்று நிரூபணம் ஆகிறதா இல்லையா?

'ஐயோ, நாம் அப்படி நினைத்துப் பண்ணினோம்; இப்படி விபரீதமாக முடிந்துவிட்டதே!' என்று எத்தனை ஸந்தர்ப்பத்தில் நினைத்திருக்கிறோம்? நல்லதென்று நினைத்துப் பண்ணுவது கெட்டதில் முடிகிறதைத்தானே இது காட்டுகிறது?

ஸ்வராஜ்யம் வாங்கிக் கொடுத்த காந்தியைப் போல நமக்கு நல்லது பண்ணினவரே இல்லை என்று விழாக்கள் கொண்டாடித் தலைவர்களெல்லாரும் புகழாரம் சூட்டுகிறார்கள். ஆனாலும் அவரோ ஸ்வராஜ்யம் வந்து ஐந்தாறு மாஸங்களுக்குள் அஸாஸினேட் ஆவதற்கு (கொலை செய்யப்படுவதற்கு) முந்தியே, தேசம் இரண்டாகப் பிரிந்ததில் லக்ஷக்கணக்கில் ஜனங்கள் கொன்றுகொண்டு ரணகளறியானதைப் பார்த்து மனஸ் தாங்காமல் 'இதற்காகத்தானா ஸ்வயராஜ்யம் வந்தது?' என்று புலம்பும்படியாயிற்று! ஸ்வதந்த்ர இந்தியாவில் அந்த ஐந்தாறு மாஸம் ஜீவிப்பதற்குள்ளேயே அவர் மனஸுக்கு ஏற்காத அனேக விஷயங்கள் நடந்து அவர் பட்டினிகூடக் கிடக்க வேண்டியதாயிற்று.

நல்லது பண்ணப் போய் எப்படி பயங்கரமாகக் கெட்டது புறப்பட்டுவிடுகிறது என்பதை நன்றாகத் தெரிவிப்பதாகக் 'கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது!' என்று பழமொழியே இருக்கிறது.

இன்னொரு பழமொழி: ஒரு ப்ரச்னையைத் தீர்க்கப் பரிஹாரமாக நினைத்து என்னவோ ஒன்று பண்ணுகிறோம். அப்போதைக்கு மூலமான ப்ரச்னை தீர்ந்த மாதிரியிருக்கிறது. ஆனால், போகப் போக, நாம் பண்ணின பரிஹாரத்திலிருந்தே எதிர்பார்க்காத கஷ்டங்கள் உண்டாகின்றன! வியாதி தீரச் சாப்பிடும் மருந்தே அப்புறம் அதைவிடப் பெரிய வியாதியை ஏற்படுத்துவதையும் பார்க்கிறோம். 'Remedy worse than disease' என்கிறார்கள்!

இதையெல்லாம் பார்த்துவிட்டு, 'சும்மாக் கிடப்பதுதான் ச்லாக்யம், நல்லது பண்ணுகிறேன் என்று ஆரம்பிக்கப்

போனால் நல்லதற்கில்லாததெல்லாம் கிளம்பிவிடுகிறது' என்ப தைத் தெரிவிப்பதாக 'சும்மா இருக்கிற சங்கை ஊதிக் கெடுத்தா னாம் ஆண்டி' என்றே பழமொழி இருக்கிறது!

ஊர் ஸமாசாரமெல்லாம் சொன்னேன். ஸொந்த ஸமாசார மாக இரண்டு சொல்கிறேன்:

ஓர் ஊரில் (ஸ்ரீமடத்தின் ஆதரவில்) அன்னதானம் செய்தது. ரொம்பப் பேர் ஏழைகள், வயிறாறச் சாப்பிட்டு விட்டு, மனஸ் குளிர்ந்து வாழ்த்திக்கொண்டு போனார்கள். (சமையல் வகைகள்) எல்லாம் நிறையப் பண்ணியிருந்தும், மூட்டை அரிசி வடித்திருந்தும், கொஞ்சங்கூட பாக்கியில்லா மல் எல்லாம் ஜனங்கள் வயிற்றுக்குப் போச்சே என்று ரொம்ப த்ருப்தியாக இருந்தது. த்ருப்தி என்றால் என்ன? 'நாமாக்கும் பண்ணிவிட்டோம்' என்ற 'ஈகோ'தான்!

பாத்ரம், பண்டம் எல்லாம் தேய்த்து, அடுத்த ஊருக்குக் கிளம்பத் தயாராக இருந்த ஸமயம். அப்போது ஒரு பத்துப் பதினைந்து ஏழை ஜனங்கள் – ஸ்த்ரீகள், குழந்தைகள் உள்பட – லொங்கு லொங்கு என்று ஓடிவந்து, 'சோறு, சோறு' என்று கேட்க ஆரம்பித்ததுகள். எட்டு, பத்து மைல் தாண்டி எங்கேயோ இருக்கிறவர்கள். அன்னதான ஸமாசாரம் அவர்கள் காதுக்கு லேட்டாகத்தான் போயிருக்கிறது. உடனே, பாவம், வெய்யிலில் அத்தனாம் தூரம் ஓடி வந்திருக்கிறதுகள்! இங்கே யானால் பருக்கை சாதம் இல்லை! அண்டா, குண்டான் எல்லாம் வண்டியிலே ஏற்றிக் கொண்டிருக்கிறது! அப்போது அவர்களுக்கு உண்டான ஏமாற்றத்தைச் சொல்லி முடியாது.

ஆயிரம் பேருக்குப் போட்டு, ஏதோ நாம் ப்ரமாத உபகாரம் பண்ணிவிட்டோமாக்கும் என்று த்ருப்திப்பட்டது அத்தனையும் இந்தப் பத்துப் பதினைந்து பேருக்குப் பண்ணிய அபகாரத்தில் ஓடியே போய்விட்டாற்போலிருந்தது!

ஏதோ பழம், கிழம் கொடுத்து, சில்லறை கொடுத்து, அவர்களை ஸமாதானம் பண்ணி அனுப்பிவைத்தது. அவர்கள் ஸமாதானமானார்களோ இல்லையோ, இங்கே (தம்மையே குறிப்பிட்டு) ஸமாதானமாகவில்லை! 'பாவம்! வயிறாற நல்ல

சாப்பாடு கிடைக்குமென்று இந்தப் படைபடைக்கிற வெய்யிலில் இத்தனாம் தூரம் ஓடிவந்து குஞ்சும் குழந்தையும் பெண்களுமாக இப்படி ஏமாந்து போச்சுகளே!' என்றுதானிருந்தது! 'ஆயிரம் பேர் சாப்பிட்டுவிட்டும் போனார்களே என்றால், நேற்றுவரைக்கும் அவர்களுக்கு நாமா போட்டோம்? நாளைக்கு நாமா போடப்போகிறோம்? அதேமாதிரி இன்றைக்கும் அவர்கள் எப்படியோ வயிற்றைக் கழுவிக்கொண்டிருப்பார்கள். ஆனால், 'போடுகிறோம்' என்று நாம் அக்ஷதை போட்டுக்கொண்டு கிளம்பினதால்தானே இந்தப் பத்துப் பதினைந்து பேர் வழக்கமாகத் தாங்கள் இருக்கிற இடத்தில் காய்ச்சிக் குடிப்பதை, அல்லது பிச்சை எடுத்துத் தின்னுவதை விட்டுவிட்டுப் பசியும் பட்டினியுமாய் வெய்யிலில் இத்தனாம் தூரம் ஓடிவந்து ஏமாந்து போகும்படி நேர்ந்திருப்பது? ஆக, கூட்டல் கழித்தல் பார்த்தால், உபகாரம் பெரிசா, அபகாரம் பெரிசா?' என்று தோன்றிற்று.

தானத்திலெல்லாம் உசந்ததாகச் சொல்லப்படும் அன்னதானத்தில்கூட இப்படி நல்லதோடு கஷ்டமும் கலந்து வருகிறது!

எதற்குச் சொல்கிறேனென்றால்: நாம் ஒருத்தனுக்கு உபகாரம் பண்ணுவதே நேராக இன்னொருத்தனுக்கு அபகாரமாக ஆகாதபோதுகூட, எப்படியோ சுற்றி வளைத்துக்கொண்டு போய், யாருக்கோ கஷ்டம் கொடுத்து, அதோடு 'உபகாரம் செய்கிறேன்' என்று அக்ஷதை போட்டுக்கொண்டு கிளம்பின நாமும் மனஸ் வருத்தப்படும்படியாகலாம் என்று காட்டுவதற்குத்தான்!

அதாவது, எந்த உபகாரமானாலும் அத்தனை ஜனங்களுக்கும் செய்ய எவருக்கும் ஸாத்யமில்லை. எவராவது நம்முடைய உபகாரத்தை எதிர்பார்த்து ஏமாந்து மனமொடிந்து போகும்படியாகவும்தான் ஆகிறது. கோடீச்வரனானால்கூட ஸத்கார்யங்களுக்கு அவன் கொடுக்க ஆரம்பிக்கும்போது புற்றீசல் மாதிரி (நன்கொடை) கேட்டுக்கொண்டு பலபேர் வருகிறபோது, ஏதோ ஓர் இடத்தில் அவன் 'இல்லை, போ' என்று கையை விரிக்கும்படியாகிறது. இவன் (புதிதாக வருபவன்) கேட்கிற cause உசந்ததாகத்தான் இருக்கிறது. இவனுக்கு முன்னாடி யாரோ மோசக்காரர்கள்கூட ஏமாற்றி வாங்கிப்

போயிருக்கிறார்கள். ஆனாலும் இவனுக்குக் கொடுப்பதற்கில்லாமல் ஏமாற்றத்தோடு அனுப்பிவைக்க நேருகிறது.

ஆஸ்பத்திரி, ஸ்கூல் என்று வைக்கும்போதும், 'Bed இல்லை'; 'ஸீட் இல்லை' என்று சொல்லி, ரொம்பவும் நோயாளியாக உள்ள ஒருவனை, நல்ல புத்திசாலியான குழந்தை ஒன்றை ஏமாற்றி, மனஸை வருத்தித் திருப்பியனுப்பும்படியாகவும் ஏற்படுகிறது!

அடுத்த புத்தகத்தில்...

ஸ்ரீ சங்கர சரிதம் என்கிற தலைப்பின்கீழ்க் கட்டுரைகள் தொடர்கின்றன.

